Registered No. M. 2330 'SIDDHANTHAM'
Vol. 33—No. 9



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 33 | சார்வரி புரட்டாசி 1960 செப்டம்பர் | இதழ் 9

உள்ளுறை — பக்கம்

ஒரு திருமந்திர உபதேசம் ... 257
நியாயங்கள் ... 262
சமயத்திற்கும் தமிழிற்கும் ஆற்றிவரும் பணி ... 272
படைப்பின் தொடக்கம் ... 278
வாழ்க்கைக் குறிப்புக்கள் ... 281
இரங்கற் பாக்கள் ... 283
இரங்கற்பா ... 285
Guru Narayana ... 288

பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 — தனிப்பிரதி அணா 4

# செய்திச் சுருக்கங்கள்

**மணிவிழா :** நாகர்கோயில் நன்னெறி மன்றச் சார்பில் 10-7-60 ஞாயிறன்று, சைவ சித்தாந்த சரபம் சிவாகம ஞானபானு சிவஸ்ரீ ஈசான சிவாசாரிய சுவாமிகள் அவர்களின் மணிவிழா மிகவும் சிறப்புறக் கொண்டாடப் பெற்றது. திருவாளர்கள் - சி. வள்ளி நாயகம் பிள்ளை, சைவப் புலவர் பி. ஏ. நடேச பிள்ளை, சி. குமரேச பிள்ளை, சிவசுப்பிரமணிய பிள்ளை, இ. பகவதிப் பெருமாள் பிள்ளை, கே. சி. தாணு, திறைசை ஆதீன பேஷ்கார் ஆறுமுகம் பிள்ளை, ஆறுமுக நாவலர் முதலிய பெருமக்கள் பலர் விழாவிற் கலந்து கொண்டு ஸ்ரீ சிவாசாரிய சுவாமிகளின் அருமை பெருமைகளைக் குறித்து வியந்து புகழ்ந்து தமது வணக்கங்களைத் தெரிவித்துக் கொண்டனர். பட்டாடை, பொற்கிழி முதலிய அடியுறைகள் அன்பர்களால் ஸ்ரீ சுவாமிகளுக்குச் செலுத்தப் பெற்றன. சுவாமிகள் வாழ்த்துரை வழங்கிய பின், வித்வான் திரு. பூதலிங்கம் அவர்கள் நன்றியுரை நவில, விழா இனிது நிறைவு எய்தியது.

**கந்தபுராண விரிவுரை :** காஞ்சிக்கு உயிர் எனச் சிறந்த குமரகோட்டத்தில், மெய்கண்டார் கழகச் சார்பில் திருக்கோயிலின் ஆதரவில், புலவர்மாமணி திரு. வீ. திருஞான சம்பந்த முதலியார் அவர்கள் செவ்வாய்க்கிழமை தோறும் தொடர்ந்து முறையாக நிகழ்த்த இருக்கும் கந்தபுராண விரிவுரையானது, 16-8-60 செவ்வாய் அன்று மாலை காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் 'சித்தாந்த சிகாமணி' திரு. க. வச்சிரவேல் முதலியார் பி.ஏ.,எல்.டி. அவர்களால் தொடக்கி வைக்கப்பெற்றது. அதுபோது 'சித்தாந்த சிகாமணி' அவர்கள், கந்தபுராணத்தின் பலதிற நலங்களையும் தத்துவ நுட்பங்களையும் விரிவாக விளக்கியுரைத்துச், சென்னையினின்று சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள், அனுப்பியிருந்த வாழ்த்துச் செய்தியையும் படித்துக் காட்டி இன்புறுத்தினார்கள். அதன்பின் 'புலவர் மாமணி' அவர்கள் தமது விரிவுரையைத் தொடங்கி நடத்தினார்கள். 500-க்கு மேற்பட்ட அன்பர்கள் குழுமியிருந்து கேட்டு இன்புற்றனர். நகரப் பிரமுகர்களும், அலுவலர்களும் பலர் வந்திருந்து சிறப்பித்தமை குறிப்பிடற்பாலது.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாளியைஉள் நாடு

மலர் 33 | சார்வரி புரட்டாசி 1960 செப்டம்பர் | இதழ் 9

பல்கலைக்கழகப் பட்டமேற்பவர்களுக்கு

## ஒரு திருமந்திர உபதேசம்

(ராவ்சாகிப் நல். முருகேச முதலியார், பி.ஏ.)

பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழா முன்னாளில் பெரும் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்பட்டு வந்தது. பல்கலைக்கழகக் கல்வியின் மகுடமாக அமைந்து அன்று நல்லுரை வழங்கப்படுவது வாழ்க்கைக்கு ஒரு வழிகாட்டியாகப் போற்றப்பட்டு வந்தது. முன் தலைமுறையில் அந் நல்லுரை வாசகங்கள் சிலவற்றைப் பட்டம் பெற்றவர்கள் மனப்பாடம் செய்து சிந்தித்து வருவதுகூட வழக்கம். இந் நாளில் அந்தச் சிறப்பும் முக்கியத்துவமும் குறைந்து வருகிறது. ஏனெனில் தற்போது பட்டப்பத்திரங்கள் பிழைப்பிற்குப் பயன்படும் ஒரு சாதனமாக உபயோகிக்கப்படுவதன்றி வாழ்க்கைக்குக் குறிக்கோள்களைக் காண்பித்துத் தருவதாகப் போற்றப்படுவதில்லை. கற்ற கல்விக்குத் தக்கவாறு நிற்றலே கல்வியின் பயன். அப்படி நிற்றலில் வழுக்கு இல்லாதவாறு பெரிதும் பயன்படுவது ஒழுக்கம் உடையார் வாய்ச்சொல். இந்த வாய்ச்சொல்லே பட்டமளிப்பு விழாவில் வழங்கப்படும் நல்லுரையின் தத்துவம்.

சென்ற ஆகஸ்டு 30-ம் தேதி சென்னைப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவில் மைசூர் கவர்னர் கனம் திரு. ஜயசாம

ராஜ உடையார் அவர்கள் சிறந்ததோர் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அதற்கு மகுடமாக நம் திருமூலர் திருமந்திரத்திலிருந்து ஒரு மந்திரத்தை எடுத்துக் காட்டினார்கள். அந்தச் சிறப்பைச் சுட்டிக் காட்டுவதற்காக எழுந்த கட்டுரை தான் இது. பெருங்குடியில் வந்த இவ்வரசர் கல்வி கேள்விகளில் மேம்பட்டவரென்றும், சிறந்த அறிவாளி என்றும், தத்துவ ஞானத்தில் ஈடுபாடுடையவரென்றும், சில அரிய நூல்கள் எழுதியவரென்றும், வாழ்நாள் முழுதும் படிப்பிலும், சிந்தனையிலும் செலவழிப்பவரென்றும் உலகம் அறியும். சைவ சித்தாந்த சாஸ்திரங்களைக் கற்க அவாவுடையரென்றும் கேள்விப்படுவது மகிழ்ச்சிக்குரியது.

அரசரவர்கள் நிகழ்த்திய நல்லுரையின் முக்கிய போதனை என்னவெனின், கல்வியின் பெரும் பயன் வாழ்க்கைக்கு நடைமுறையில் பயன்படக்கூடியதாக இருக்கவேண்டுமென்பதும், நல்ல பண்பாடுகளை இடைவிடாது வளர்க்க வேண்டுமென்பதும், ஆன்மலாபத்தைத் தருவதாக இருக்க வேண்டுமென்பதுமே. வெறும் கல்விப் புலமையோ அல்லது விஞ்ஞான அறிவோ இந்தப் பயனை அளிக்க வல்லனவல்ல. எனவே பல்கலைக்கழகப் பயிற்சியைப் பெற்ற ஒருவன் கலாசாலைகளில் பெற்ற அறிவுடன் தன் சொந்த முயற்சியாலும், ஆர்வத்தாலும் கல்வியையும் உயர் ஞானத்தையும் பிணைத்துப் பெரிய சாதனைகளுக்குத் தன்னைப் பக்குவப்படுத்திக்கொள்ள வேண்டும். இந்தக் குறிக்கோள் இல்லையேல் பல்கலைக்கழகக் கல்வி நல்வாழ்வுக்கு ஒரு பயனுமிலது என்பது அறியப்படல் வேண்டும் என்றும் கூறினார்கள்.

அரசரவர்கள் இன்னுமொரு அரிய கருத்தைத் தெரிவித்தார்கள். கல்விப் பயிற்சியில் உண்மையாகவே ஆசிரியனும் மாணவனும் ஒருவருக்கொருவர் உபகரித்துக் கொள்கிறார்கள். அவர்கள் பயிற்றுவித்த, பயின்ற கல்வி இருவர்களுடைய மனோவளர்ச்சிக்கும் ஒளி தருகிறது. தைத்திரிய உபநிடதம் இதையே "பிரம்ம வர்க்கஸ்" எனப் பேசுகிறது. பிரம்மத்தை நாடும் இருதிறத்தாரும் ஒருங்கு அடையவேண்டுவது இந்த ஒளி. "சஹநௌ யசே, சஹநௌ பிரம்ம

வர்ச்சஸம்'' என்பது உபநிடத வாக்கியம். இந்த உண்மையைச் சிறிதளவாகிலும் ஆசிரியர்களும் மாணவர்களும் உணர்வது நலன் என்பதில் ஐயமில்லை.

சுதந்திரம் அடைந்தோம் என்று முழங்கப்படும் இந்நாளில் எவனொருவன் உண்மையிலே சுயராஜ்ய சித்தியைப் பெறத் தகுதியுடையவன் எனில் தன்னுடைய ஆன்மாவை எல்லோரிடத்தும் காண்பவன்தான். இந்த அறிவில்லாதவன் விடுதலையடையாதவன் என்றே கருதவேண்டும். "ஆத்மாவே எங்கும் வியாபகம், எவன் இங்ஙனம் காண்கிறானோ சிந்திக்கிறானோ அறிகிறானோ, ஆத்மாவிலேயே இன்பமும், ஆத்மாவிலேயே விளையாட்டும், ஆத்மாவிலேயே கூடிமகிழ்தலும், ஆத்மாவிலேயே ஆனந்தமும் உடைய அவன் (ஸ்வராட்) தன்னைத்தானே ஆள்பவன் ஆகிறான். எவர்கள் இதற்குப் பிறிதாகக் காண்கிறார்களோ அவர்கள் பிறர்களால் ஆளப்படுகின்றனர்'' என்று சாந்தோக்கிய உபநிடதம் (7 : 25-2) கூறுகிறது என்று மைசூர் அரசர் எடுத்துக் கூறினார்கள்.

அரசரவர்கள் தம் சொற்பொழிவின் முடிவில் கருவூலமாக எடுத்துதவிய மேற்கோள் திருமூலர் திருமந்திரத்தினின்று ஞானக்கண் இல்லாதார்க்கு உண்மைப் பொருள் வெளிப்படுவதே இல்லை. ஞானக்கண் உள்ளவர்களுக்குப் பரம்பொருள் தானே வெளிப்படுகிறது என்பது இதன் பொருள்.

அறிவுடையார் நெஞ்சகலிடமாவது
அறிவுடையார் நெஞ்சருந்தவமாவது
அறிவுடையார் நெஞ்சொடாதிப்பிரானும்
அறிவுடையார் நெஞ்சத்தடங்குகின்றானே.

இந்த அரிய திருமந்திரத்தை மைசூர் அரசரவர்கள் தேர்ந்தெடுத்துப் பட்டதாரிகளுக்குத் தம் அறிவு செறிந்த உரைக்கு மகுடமாக உதவியதனால், அவர்கள் திருமந்திரத்தை ஆழ்ந்து படிப்பவர்கள் என்று ஊகித்தறிய வேண்டியிருக்கிறது. திருமந்திரம் வேதாகமசாரம் என்பதும் ஞானவிளக்கு என்பதும் உலகமறியும். ஆன்மலாபத்தை விரும்

பும் யாவரும் பொது மறைகளாகக் கற்கவேண்டியவை திருக்குறளும், திருமந்திரமும், என்று சொல்வது மிகையாகாது.

அரசரவர்கள் காட்டிய மேற்கோள் திருமந்திரம் எட்டாந் தந்திரத்தின் "அறிவுதயம்" என்ற பகுதியில் உயிர்நிலைபோன்று அமைந்துள்ள ஒரு சூத்திரம். இந்தத் தந்திரத்தில் 'அறிவு உதயம்' என்பது 'அவத்தை பேதம்' கூறியபின் அமைந்துள்ளது. முற்கூறிய சாந்தோக்கிய உபநிடதக் கருத்தை வலியுறுத்தி விளக்கங் கூறுவதுபோல் உள்ளது பின்வரும் மந்திரம்:—

தன்னையறியத் தனக்கொரு கேடில்லை
தன்னையறியாமற் றானே கெடுகின்றான்
றன்னையறியு மறிவை யறிந்தபின்
றன்னையே யர்ச்சிக்கத் தானிருந்தானே.

தன்னை யறிந்தவனே சுயராஜ்ய சித்தி பெறுகிறான். அதுவே அவனுக்கு "நின்று சுடர்விடும் தூய விளக்கு" (வர்க்கஸ்). அதன் தத்துவம் யாதெனின் 'அறிவறிவாக அறிந்து அன்பு செய்தல்' என்பதே என்று பலபலவாகக் கூறுகிறது இந்தத் தந்திரம். திருமந்திரத் தத்துவத்தின்சிறப்பு யாதெனின் ஆன்ம ஞானத்தின் திறவுகோல் 'அன்பு' ஒன்று தான் என்பது. இந்தச் சித்தாந்தம் வேறு எந்த நூலிலும் கிடையாது.

ஒன்பதாந் தந்திரத்தில் 'ஞானோதயம்' என்னும் பகுதியில் தத்துவன் தலைப்படும் தத்துவத்தையும், விளக்கை விளக்கவல்ல உபாயத்தையும் திருமந்திரம் உணர்த்துகின்றது.

தத்துவ மெங்குண்டு தத்துவனங் குண்டு
தத்துவ மெங்கில்லை தத்துவனங் கில்லை
தத்துவ ஞானத்தின் தன்மை யறிந்தபின்
தத்துவ னங்கே தலைப்படுந் தானே.

இம்மந்திரம் தத்துவங்களிலெல்லாம் பரம்பொருள் நிறைந்து நிற்குமாதலால் தத்துவங்களை யாராய்ந்தறியின்

அவற்றுட் கலந்து மறைந்து நிற்கும் பரம்பொருள் தலைப் படும் என்று கூறுகிறது.

விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி
விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு
விளக்குடையான்கழல் மேவலு மாமே.

இங்கு விளக்கைப் பிளந்து கூறியதற்கு ஆன்மாவைத் தத்துவங்களினின்றும் வேறு பிரித்தல் என்பது பொருள்.

திருமந்திரத்தில் 'கல்வி' என்ற அதிகாரம், அன்புடைமை, அன்பு செய்வாரை அறிவான் சிவம் என்ற பகுதிகளின்பின் வைக்கப்பட்டது ஈண்டு நோக்கற்பாலது. இவ்வதிகாரம் மாலொன்றைப் பற்றி மயங்காது பரமனைப் பற்றுவதே கற்றவர் பெறும் பேரின்பம் எனத் தெரிவிக்கிறது. திருமந்திரத்தில் அறவுதயமும் ஞானோதயமும் தனித்தனியே பேசப்படுவது காண்க. ஞானமென்பது இறைவன் அருள்.

எனவே, உண்மை ஞானம் பெற விரும்புபவர்கள் திருமந்திரத்தைப் படித்துப் பிறர்க்கு எடுத்துக்கூறுவதும் பெரிய கடமையாக இருக்கிறது. திருமந்திரத்தில் ஈடுபட்டுள்ள உயர்திரு உத்தமர் மைசூர் அரசர் இந்தக் கடமையைச் செய்துள்ளார் எனக் கருதி மகிழ்ச்சியடைய வேண்டும். கன்னடத்தைத் தாய்மொழியாகக்கொண்ட இந்தப் பெருந்தகையாரின் சால்பு, தமிழர்களை நாணச் செய்கின்றது.

இந்த வேளையில் இன்னொரு கடமையும் சிந்தனைக்குரியது. பல்கலைக் கழகங்களில் பட்டம் பெறும் இளைஞர்களுக்குத் 'திருமந்திர'த் தொகுப்பாவது செய்து பரிசாகக் கொடுக்க வேண்டும். அரிய பொக்கிஷமாகிய இந்த நூல் பெரும்பாலார் பார்வைக்கு மறைந்து கிடக்கிறது. இந்த பொக்கிஷத்தில் ஒரு மணியை எடுத்து மைசூர் அரசர் வழங்கினார்கள். சைவ மடங்களோ அல்லது வேறு நிலையங்களோ தனிப்பட்ட செல்வந்தர்களோ திருமந்திரத்தில் பொதுவாக அமைந்திருக்கும் ரத்தினங்களை ஒரு செழுமணித் திரளாகத் திரட்டி முன்னுரை குறிப்புரை கூட்டி,

அவைகளைத் சாதி மத வித்தியாசம் பாராட்டாது, விண்ணப்பிக்கும் பட்டதாரிகளுக்குப் பிரதி ஆண்டும் இலவசமாக வழங்க வேண்டுமென்று பெரிதும் பிரார்த்திக்கப் படுகிறது. அடியேன் பட்டம் பெற்ற ஆண்டு (1926) திருக்கோவலூர் ஆதீனம் தவத்திரு ஞானியார் சுவாமிகளின் பேரருளால் 'திருவாசகம்' சென்னை செனட் அவுசின் வெளிப்புறத்திலேயே கான்வொகேஷன் தினத்தன்றே வேண்டிய பட்டதாரிகளுக்கு வழங்கப்பட்டது. அதுபோல் நிரந்தரமாகப் பிரதி ஆண்டும் திருக்குறள், திருமந்திரம்போன்ற ஒப்புயர்வற்ற நூல்களை வழங்கத்தக்க ஏற்பாடுகள் செய்தல் கடமையாகும். வேண்டிய மூலதனம் சிவநேயச் செல்வர்கள் அமைத்துத் தந்தால், பல நற்பணிகளையாற்றிய சைவ சித்தாந்த மகா சமாஜம் மேல் செய்யவேண்டிய பணிகளுக்கு முன்வரக் கூடும்.

---

# நியாயங்கள்

[முருகவேள்]

சமய தத்துவ நூல்களில், அவற்றின்கட் கூறப்படும் கருத்துக்களைத் தெளிவுற விளக்குவதற்காக உரையாசிரியர்களால் இடையிடையே "நியாயங்கள்" பலப்பல எடுத்தாளப் பெறுதல் காணலாம். வேதத்திற் கரும காண்ட ஆராய்ச்சி செய்தற் கெழுந்த மீமாஞ்சை பற்றிய வடமொழி நூல்களில் அவற்றின் பொருளைத் தெளிவுறுத்துதற் பொருட்டு "நியாயங்கள்" மிகுதியாகக் கையாளப்பெறும். இங்ஙனம் வடமொழி நூற் பொருளை விளக்குதற்கு எடுத்துக் காட்டப் பெறுவனவாயினும், இந்நியாயங்கள் யாவர்க்கும் சுவை பயப்பனவாயும், அறிவாராய்ச்சி முறைகளைத் தெருட்டி வழி வகுப்பனவாயும் எல்லார்க்கும் பயன்படுவனவாகும். "நையாயிக நூலிற் கூறும் தருக்கமும், மீமாஞ்சை நூலிற் கூறும் நியாயங்களும் எல்லா நூல்களுக்கும் உபகாரமாம் எனக் கோள்க" என்பர் மாதவச் சிவஞான சுவாமிகள்.

" நுண்மையும் சுருக்கமும் ஒளியுடை மையும்
மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப "

என ஆசிரியர் தொல்காப்பியர் வகுத்துள்ள வரையறைக்கு, இந்நியாயங்களும் ஏற்புடையனவாக அமைந்து திகழ்கின்றன. ஆசிரியர் சுவாமிநாத தேசிகர் அவர்கள், தாம் இயற்றிய இலக்கணக் கொத்துரை என்னும் நூலில்,

" தொல்காப் பியம்திரு வள்ளுவர் ஆதிநூல்
வடமொழி நியாயம் வந்தன...."

எனக் குறிப்பிட்டுச் சில எடுத்துக்காட்டுக்களும் தந்துள்ளார். அஃதெங்ஙனமாயினும், வடநூற் கடலை நிலைகண்டுணர்ந்த ஆசிரியர் மாதவச் சிவஞான சுவாமிகள் தமது சிவஞான போதப்பேருரை, சிற்றுரை, சிவஞானசித்தியாருரை, சித்தாந்த மரபு கண்டன கண்டனம், சிவசம வாதவுரைமறுப்பு என்னும் நூல்களில், இந்நியாயங்களை மிகுதியாக ஆங்காங்கு எடுத்துக் கையாண்டு தமது நூற்பொருள்களைச் சுவையூட்டிச் செல்வர். இங்ஙனம் இவற்றைக் கையாளுதலில் அவர் பெரு விருப்ப முடையவர் என்பது, அவர் தம் சிவசமவாதவுரை மறுப்பாற் புலனாகின்றது. சைவ சித்தாந்தம் பயிலும் மாணவர்களுக்கு, ஒரு சில முதன்மையான நியாயங்களை யாதல் தெரிந்து கொள்ளுதல் சுவையும் நலமும் பயக்கும் என்னும் கருத்தால், ஈண்டு ஒரு சில நியாயங்கள் மட்டும் அவற்றிற்குரிய தமிழ் இலக்கியச் சான்றுகளுடன் தொகுத்துத் தரப்பெறுகின்றன. அவை வருமாறு :

அந்த கஜ நியாயம் : " உணரார் உடங்கு இயைந்து தம்மிற் புணராமையாவது, பிறவிக்குருடர் பலர் குழீஇக் கொண்டு, வேழங்காண்டல் விருப்பான் அது நின்றுழிச் சென்று, கையினுல் ஒவ்வோர் உறுப்பினைத் தைவந்து, வேழமாவது முறம் போல்வதென்றும், உரல் போல்வ தென்றும், உலக்கை போல்வதென்றும், மலைபோல்வ தென்றும் தம்முள் மாறு கொண்டு, ஒருவரை யொருவர்

மறுத்துக் கலாம் விளைத்தல் போலச், சித்தாந்த சைவ நெறி நின்று ஆசான் திருவருள் பெறுதார், தத்தம் உணர்விற் கேற்பச் சமய நூல்களில் ஒவ்வொன்றனை ஆராய்ந்து, அவற்றிற் கூறும் ஏகதேசப் பொருள்களை பற்றிக் கூறி, ஒருவரை யொருவர் மறுத்துத் தம்முள் மாறுகொண்டு கலாம் விளைத்தல் ” என்பது சிவஞான போதப் பேருரை. அந்தன்- குருடன். கஜம் - யானை.

“ முதல்ஒன் றும் ஆனை முதுகுடன் வாலும்
திதமுற கொம்பு செவிதுதிக் கைகால்
மதியுடன் அந்தகர் வகைவகை பார்த்தே
அதுகூறல் ஒக்கும் ஆறு சமயமே ” —திருமந்திரம்

அஜ கஜாந்தர நியாயம் : அஜம் - ஆடு. கஜம் - யானை. ஆடு சுவை மிகுந்த கரும்பை விடுத்து அதன் இலையை மட்டுமே மேயும். யானையோ இலையை விரும்பாது கரும்பையே தின்று இன்புறும். அதுபோல, எளிய செயல் களையே செய்து மன நிறைவு கொள்ளுவர் சிறியோர். பெரியவர்களோ செயற்கு அரிய செயல்களையே முயன்று செய்து முடித்து இன்புறுவர்.

“ புறம்பு காண்குவன் புல்லியன் ஈசனை!
அறிந்த ஞானி அகம்உறக் காண்பனல்
எறும்பி காண்குறில் இன்கரும் பேகொளும்
செறிந்த ஆடிலை தின்பன என்பவே ” —பிரபுலிங்கலீலை

அஜ கள நியாயம் : “ ஈண்டுக் கூறிய வாற்றால் வேறோராற்றாற் பெறற்பாலதின்றி நியதமாய் முன்னிற்பது காரணம், அவ்வாறு நியதமாய்ப் பின்னிற்பது காரியம் எனக் காரண காரியங்கட்குப் பயப்பாடின்றி நையாயிகர் முதலியோர் கூறும் இலக்கணம் ஆட்டின் கழுத்திற்றூங்கும் முலையோ டொக்குமாறும் உணர்ந்துகொள்க ” என்பது சிவஞான போதப் பேருரை. அஜம் - ஆடு. களம்-கழுத்து.

“ காட்டும் குறியும் கடந்தவர் காரணம்
ஏட்டின் புறத்தில் எழுதிவைத் தென்பயன் ?

கூட்டும் குருநந்தி கூட்டிடின் அல்லது
ஆட்டின் கழுத்தில் அதள்கிடந் தற்றே" —திருமந்திரம்

சுந்தோப சுந்த நியாயம்: ஒரு தாய் வயிற்றில் உடன் பிறந்தோராகிய சுந்தன் உபசுந்தன் என்னும் அசுரர் இருவரும் தம்முள் மிக ஒற்றுமையுடையராய் வாழ்ந்திருந்து, பின்னர்த் திலோத்தமையின் காரணமாகத் தம்முள் தாமே பொருது கொண்டு அழிந்தனர். இருபொருள்கள் தம்முள் ஒன்றனை யொன்று மறுத்து நின்று முரணி வலிகெட்டு அழிதலுக்கு இதனை எடுத்துக் காட்டுவர். "நல்வினையுள் மிக்கதாகிய பரிமேத வேள்விப் புண்ணியமும், தீவினையுள் மிக்கதாகிய பிரமக் கொலைப் பாவமும், ஒருங்கே பக்குவமெய்திப் பயன்படுதற்கண் ஒத்தனவாயின், அவை தம்முள் ஒன்றானொன்று அடிக்கப்பட்டுச் சுந்தோப சுந்த நியாயமாய்க் கெட்டொழியுமாகலின், அவை அவ்வாறு தம்முள் ஒத்தலே இருவினை யொப்பு என்பர் ஒரு சாரார்" என்பது சிவஞான போதப் பேருரை.

"தந்தோள்வலி மிக்கவர் தம்மொடு தாய்வயிற்றின்
வந்தோர்மட மங்கை பொருட்டு மலைக்கலுற்றார்
சிந்தோடரி யுண்கண் திலோத்தமை காதல்செற்ற
சுந்தோபசுந் தப்பெயர்த் தொல்லையி னேரும்ஒத்தார்"
—கம்பர்

"முராரியை முராரி நாபி முளரிவாழ் முனியை முக்கண்
புராரியை நோக்கி முன்னாட் புரிபெருந் தவத்தின் மிக்கார்
சுராரிகள் தம்மிற் சுந்தோப சுந்தர் என்றிருவர் தங்கள்
திராரி ஏவலினால் வந்த திலோத்தமை தன்னைக் கண்டார்"

"காண்டலும் அவள்மேல் வைத்த காதலால் உழந்து நெஞ்சில்
ஈண்டிய துயரத் தோடும் இருவரும் நயந்த போழ்தப்
பூண்டகு பொலிவி னாள்தன் பொருட்டமர் தம்மிற் பூண்டு
மாண்டனர் என்னும் வார்த்தை மாநிலம் அறியும் அன்றே"
—வில்லிபுத்தூரார்

பங்கஜ நியாயம்: பங்கம் - சேறு. ஜம் - தோன்றுவது. பங்கஜம் - தாமரை. இடத்தின் நிகழ் பொருளின்கட்

படுவதனை இடத்தின் மேல் ஏற்றிக் கூறுதல் அமையும் என்பதனை விளக்க இதனை எடுத்துக் காட்டுவர். தாமரைக் கொடியானது அதன் கிழங்கினின்றே தோன்றுகின்றதாயினும், சேற்று நிலம் அக்கிழங்குக்கு இடனுதல் பற்றித் தாமரையைக் கிழங்கினின்று தோன்றுவதாகக் கூருமல், சேற்றினின்று தோன்றிய தென்னும் பொருளில் தாமரை 'பங்கஜம்' எனப் பெயரிட்டு வழங்கப்படும். அதுபோல, "மாயையின் ஒடுங்கித் தோன்றும் உலகம் அம்மாயைக்கு ஆதாரமாகிய இறைவனது சத்தியின் ஒடுங்கி, அதன்கணின்றும் தோன்றியதே யாகும் என்பார், மண் குளிர்ந்து வித்துண்டா மூலம் முளைத்தவா தாரகமாம் அத்தன்தாள் நிற்றல் வித்தகமாம் என்ருர்" என்பது சிவஞான போதப் பேருரை.

பிரமரகிட நியாயம் : வேட்டுவன் என்னும் ஒருவகைக் குளவியானது புழுவைக் கொட்டிப் பார்த்து மிகத் துடிப்பதையும், துடியாமற் கிடப்பதையும் ஒழித்து, இடை நிலைப் பட்ட துடிப்புடையதனை எடுத்துச் சென்று தன் கூட்டில் வைத்துத் தன்னுருவை யடையச் செய்யும் என்னும் வழக்கு. ஞானசிரியன் மாணவனைப் பல வகைகளில் ஆராய்ந்து தேர்தலையும், பின்னர் அவனைத் தன்னைப் போல் உயர்நிலையடையச் செய்தலையும் விளக்க, இதனை எடுத்துக் காட்டுவர். பிரமரம்-வண்டு, குளவி. கிடம் - புழு.

"வேட்டுவன்ஆம் அப்புழுப்போல் வேண்டுருவைத் தான்கொடுத்துக்
கூட்டானே மண்போற் குளிர்ந்து." —சிவஞான போதம்.

"வண்டுகள் ஆகிமாறும் மயிர்க்குட்டி மற்றேர் செந்துப்
பண்டைய உருவந் தானே வேட்டுவ னுய்ப்பி றக்கும்..."—சிந்தியார்.

"அஞ்சிறை யறுபதம் அடைந்த கீடத்தைத்
தஞ்செனத் தன்மயம் ஆக்கும் தன்மைபோல்
வஞ்சகத் தரக்கரை வளைத்து வள்ளல்தான்
செஞ்சரத் தூய்மையால் தேவர் ஆக்கினுன்" —கம்பர்.

"அடங்கிய விருத்தியான்என் றறிந்தபின் செறிந்த மண்ணின்
குடம்பையுட் புழுமுன் ஊதும் குளவியின் கொள்கை போலத்

தொடங்கிய குருவும் ஆன்ம சொரூபமே மருவ வேண்டி
உடம்பினுட் சீவனைப் பார்த்து உபதேசம் ஓது வாரே''

—கைவல்லிய நவநீதம்

ஸ்தாலிபுலாக நியாயம்: ஸ்தாலி - பானை. புலாகம் - சோறு. "அவ்வுரையிலுள்ள தோஷங்களை விசாரிக்கப் புகுதல் மணற்சோற்றிற் கல்லாராய்தல் போலும். ஆதலின், அதனை லக்ஷியத்தின்பாற்படுத்துக் கண்டித்தல் மகாபாணப் பிரயோகத்திற்கு முயலை லக்ஷியப்படுத்தல் போல வடுச் சொற்கு ஏதுவாம். ஆயினும், சாஸ்திரப் பிரவேசமின்றிச் சித்தாந்த உபதேச மாத்திரங் கேட்டுச் சிந்தித்திருக்கும் மந்த புத்தியுடையார்க்கு, அதிற் புத்திப் பிரம்சம் வாராமற் சிறிதொரு வழிகாட்டுக என்று பெரியோர் ஆஞ்ஞாபித்த லின், ஆஞ்ஞோல்லங்கனம் செய்யலாகாதென்று சம்மதித்து, ஸ்தாலிபுலாக நியாயம் பற்றி அதன்கண் ஆண்டாண்டுச் சில தோஷங்கள் எடுத்துக் காட்டுதும்'' என்பது சிவஞான முனிவரின் சிவசமவாத வுரை மறுப்பு.

''பெருலையுட் பெய்த அரிசியை வெந்தமை
ஓரவிழி னலே யுணர்ந்தாங்கு,—யார்கண்ணும்
கண்டதனாற் காண்டலே வேண்டுமாம் யாதற்கும்
கண்டது காரணம்ஆ மாறு''

—பழமொழி நானூறு.

சாக பசு நியாயம்: முன்னர்ப் 'பசு' எனப் பொதுப் பெயராற் கூறிப் பின்னர்ச் 'சாகபசு' எனப் பெயரடை யாற் கூறுதலான், முன்னர்க் கூறிய பசுவும் சாகமே எனப் பொருள்கொள்ள நிற்பதொரு முறைமை. சாகம் - வெள்ளாடு. ''உபநிடத முழுவதும் பரமசிவனுக்குரிய சிறப் புப் பெயர்களாற் பரமேசுவரன் பெருமையை விளங்கக் கூறுதலானும், இவ்வாறு ஏனை யுபநிடதங்களுள் முதற்கண் எடுத்துக்கொள்ளாமையானும், ஏனையுபநிடதங்களினும் சுவே தாச்சுவதரம் வலியுடைத்தாகலான் அதனுட் கூறப்படுங் காரணப் பொருளாகிய பரமசிவனே பரப்பிரமம் எனவும், ஏனைக் காரணவாக்கியங்களுட் கூறும் பெயர்களெல்லாம்

சாகபசு நியாயத்தாற் பரமசிவனையே உணர்த்தி நிற்கும் எனவும் கொள்க" என்பது சிவஞான போதப் பேருரை.

சாகா சந்திர நியாயம்: "யாண்டும் பொதுவகையான் உணர்ந்து சிறப்புவகையான் உணராததற்கே இலக்கணம் கூறப்படும். பொதுவகையான் உணராக்கால் இலக்கணத்தை அவாவுமாறு இல்லை; சிறப்பு வகையான் உணர்ந்த வழி இலக்கணத்தாற் பயனில்லை. முகிற்படலத்தின் மறைந்து சிறிதே தோன்றும் இரண்டாம் நாளைப் பிறையைக் காணலுறு வார்க்கு நுனிக்கொம்பின் கண்ணது திங்களென்றல் பொது வியல்பு. அதுபற்றி ஆண்டு உற்று நோக்கியவழிப் பேரொளி யால் தண்ணென்ற கிரணங்களை யுடையது திங்களென்பது சிறப்பியல்பு" என்பது சிவஞான போதப் பேருரை.

தூலாருந்ததி நியாயம்: "அருந்ததி மீனை அறியாதா னுக்கு இஃது அருந்ததி மீன் எனக் காட்டின், அது மிகவும் நுண்ணிதாகலிற் காண்டல் அரிதாகலின், அதனுடன் தோன்றுவதோர் பெருமீனை இஃது அருந்ததி எனக் காட்டி, அதனை உற்று நோக்கி யுணர்ந்த பின்னர் அருந்ததிமீன் அஃ தன்று, அதன் மருங்கே தோன்று நின்றது பார் எனக் காட்டி யுணர்த்துதல் போல்வதோர் முறைமை" என்பது சிவஞானபோதப் பேருரை.

"தாலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறை காட்டுவார்போல்
ஆலத்தின் உடுக்கள் காட்டி அருந்ததி காட்டுவார்போல்
தூலத்தை முன்பு காட்டிச் சூக்கும சொரூபம் ஆன
மூலத்தைப் பின்புகாட்ட முனிவரர் தொடங்கி னாரே"

—கைவல்லிய நவநீதம்.

கைமுதிக நியாயம்: 'கிமுதா' - 'கேட்பானேன்?' பூனைக்கே அஞ்சுகின்றவன் புலிக்கு அஞ்சக் கேட்பானேன் என்றாற்போல்வது. "தனக்கு அன்னிய சாதியாய் இருக் கும் சடபதார்த்தத்தோடு கூடுங்கால் அவ்வண்ணமாய் இருக் கும் ஆன்மா, சிவனோடு கூடிச் சிவனாய் இருப்பது கைமுதிக நியாய சித்தம்" என்பர் சிவஞான முனிவர். "காட்டிக்

காணும் எனவே, கைமுதிக நியாயத்தான் முதல்வனையே விடயிக்கும் ஞானிகள் உடம்பின் நிகழும் பிராரத்தம் முழுவதும், அவர்களிடமாய் நின்று முதல்வனே ஏன்று கொள்ளுவனுகலின், அவருக்கு அவ்வாதனை தாக்குமாறு இல்லையென்பதூஉம் பெறப்படும்'' என்பது சிவஞான போதப் பேருரை.

''மறுவில் சிந்தைவன் தொண்டர் வருந்தினல்
இறும்ம ருங்குலார்க்கு யார்பிழைப் பார் ? என்று
நறுமலர்க் கூந்தல் நங்கைமுன் கொண்டபுன்
முறுவல் என்ன முகிழ்த்தது வெண்ணிலா.''

—பெரிய புராணம்.

''கண்பிற பொருளிற் செல்லா கருத்தெனின் அஃதே கண்ட
பெண்பிறந் தேனுக் கென்றால் என்படும் பிறருக் கென்றாள்''

—கம்பர்.

சியால சார மேய நியாயம்: பெயர் ஒற்றுமையால் நேரும் மயக்கத்தினை விளக்க இதனை எடுத்துக்காட்டுவர். திருமணத்தின்பின் புக்ககத்திற்கு முதன்முதலாகச் சென்ற பெண் ஒருத்தி, அவளது கணவன் தான் வளர்த்துவந்த நாயினைப் பெயர் கூறி யழைத்து ' நீ இங்கு ஏன் வந்தாய் ? வெளியே செல்' என்று கடிந்து கொள்ள, அந்நாயின் பெயரே தற்செயலாகத் தனது தமையனுக்கும் அமைந்திருந்தமையால், தன்னுடைய தமையனைத்தான் தனது கணவன் இங்ஙனம் இகழ்ந்துரைத்துக் கடிந்துகொண்டான் எனத் தவறாக எண்ணிக்கொண்டு மனம்மிக வருந்திப் புலம்பினள். பின்னர் உண்மையறிந்து ஆறுதல் அடைந்தாள். எனவே, பெயர் ஒற்றுமையால் ஒன்றைப் பிறிதொன்றாக எண்ணிப் பிறழவுணர்ந்து மயங்குதல் கூடாது என்ற வற்புறுத்துவது இந்நியாயம் ''பலபொருட்குப் பொதுவாய இலக்கணம் பொதுவியல்பென்றும், ஒரு பொருட்கேயுரிய இலக்கணம் சிறப்பியல்பென்றும், அளவை நூலாற்கூறப்படும் பொதுவியல்பு சிறப்பியல்பு வேறு ; தடத்த லக்கணம் சொரூபலக்கணம் என்னும் வடசொற்குப் பரியாயப் பெயராய் ஈண்டுக்

கூறப்படும் பொதுவியல்பு சிறப்பியல்பு வேறெனத் தெரிந்துணர்ந்து கொள்க. இவ்விரு வேறு வகைக்கும் சொல்லொருமை மாத்திரையே பற்றி மயங்கற்க!" "வேதாந்தமும் சித்தாந்தமும் வேறு என்பாரை மறுத்துப் பல பொருள்படும் சூத்திரத்தை அங்ஙனம் படாமைத் தெளித்துரைக்கும் பாடியம்போல வேதாந்தத்தைத் தெளித்துரைப்பதே சைவ சித்தாந்தம் என்பார், மகுடாகமம் முதலியவற்றுள் ஓதியவாறே 'வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தத் திறன்' என்றார். ஈண்டு வேதாந்தம் என்றது வேதத்தின் முடிபுகளாகிய உபநிடதங்களை ; வேதாந்தம் எனப் பெயர் பெற்ற ஏகான்மவாத நூலையன்றென உணர்த்துதற்கு 'வேதத் தலை தரு பொருளாய்' என இறுதியினும் கூறினர்" என்பது சிவஞான போதப் பேருரை. 'சியாலன்' என்பது ஒருத்தியின் தமையனுடைய பெயர். 'சாரமேயன்' என்பது ஒரு நாயின் பெயர்.

கூப மண்டூக நியாயம்: கூபம் - கிணறு. மண்டூகம் - தவளை. கிணற்றுத் தவளை தனக்குரிய கிணற்றினையே ஏனைய எல்லா நீர்நிலைகளையெல்லாம் விடப் பெரியதென எண்ணிக் கொள்ளுதல் போல, அவரவர் தமக்குரிய ஒவ்வொன்றினையே பெரிதெனத் தவறாக எண்ணிக்கொண்டு மயங்குதல்.

"கூவ லாமை குரைகட லாமையைக்
கூவ லோடொக் குமோகடல் என்றல்போல்
பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே"
—திருநாவுக்கரசர்.

"அஞ்சனக்கண் ணார்க் கருநிதியம் தோன்றுவபோல்
நஞ்சலகை மாற்றினதின் ஞானுவர்போல்—வெஞ்சாப
வீடுபோல் தோன்றும்அருள் மேலீட்டால் விப்பிரட்டாம்
ஒடையில் மண்டுகம்ஒப் பார்க்கு —ஒழிவிலொடுக்கம்

கெதானு கெதிகம்: கெதம் - செல்லுதல், அனுகெதிகம் - பின் தொடர்ந்து செல்லுதல். ஒருவர் முன்னே செல்ல, அதனைப் பின் தொடர்ந்து தமக்கென ஒருணர்வு இன்றி

ஆட்டு மந்தை போற் பின்பற்றிச் செல்லுதல். "இக்காலத்துச் சைவரில் ஒரு சாரார், உருவ சிவசமவாதிகளிற் சிறு பான்மை வேறுபடப் புதிதாக ஒரு மதம் கட்டிக் கொண்டு, அதற்கேற்பச் சிவாகம வாக்கியங்களைத் தமக்குத் தோன்றிய வாறெல்லாம் ஈர்த்து இடர்ப்படுத்து வியாக்கியானம் செய்து தம்முள் வைத்துத் தாமே நலம் பாராட்டா நிற்பர். அது கேட்ட பேதைகளும், அவர் சொல்லிய அர்த்தத்தையும் சிவாகம வாக்கியங்களையும் முன்பின் மலைவற நோக்கி, இஃதிணங்கும் மற்றிணங்கா தென்று தெரிந்து கொள்ள மாட்டாமல், கேதானு கேதிக நியாயத்தானே அவர் தம் மதத்திற்றானே வீழ்ந்து கூடி நலம் பாராட்டா நிற்பர்" என்பது சிவசமவாதவுரை மறுப்பு.

"தொன்மையவாம் எனும்எவையும் நன்றாகா ; இன்று
 தோன்றியன எனும்எவையும் தீதாகா ; துணிந்த
நன்மையினர், நலங்கொள்மணி பொதியும்அதன் களங்கம்
 நவையாகா தெனஉண்மை நயந்திடுவர் ; நடுவாம்
தன்மையினர் பழமைஅழ காராய்ந்து தரிப்பர் ;
 தவறுநலம் பொருளின்கண் சார்வாராய்ந் தறிதல்
இன்மையினர், பலர்புகழில் ஏத்துவர் ; ஏதிலர்உற்று
 இகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர், தமக்கெனஒன் றிலரே."

—உமாபதிசிவம்.

(தொடரும்)

---

திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடம்

# சமயத்திற்கும் தமிழிற்கும் ஆற்றிவரும் பணி

(கொழும்பு அருள் - தியாகராஜா அவர்கள்,
இலங்கை வானெலியில் ஒலிபரப்பியது)

பதினேழாம் நூற்றுண்டில் இமயம் முதல் குமரிவரை சைவசமயத்தைப் பரப்பிய குமரகுருபர சுவாமிகளை அறியாதார் யார்...? இவர் செந்தில் முருகனிடத்தில் எல்லையில்லாத பேரன்பு பூண்டவர். அப்பெருமானின் திருவருளால் உதித்தவர். திருச்செந்தூரின் பெருமையை அகநானூறு, புறநானூறு, பத்துப்பாட்டு சிலப்பதிகாரம் முதலிய பண்டைத்தமிழ் நூல்கள் நன்ருக எடுத்துப் பேசுகின்றன. வடமொழி நூல்களிலும் திருச்செந்தூரைப் பற்றிய பல குறிப்புகளைக் காணலாம்.

குமரகுருபர சுவாமிகள் ஐந்து வயது வரை ஊமைப் பிள்ளையாகப் பேசாதிருந்தனர். அதனைக் கண்டு துயரடைந்த அவரது பெற்ருேர்கள், இவரைத் திருச்செந்தூருக்கு அழைத்துச் சென்று, சண்முகப்பெருமானின் திருமுன்பு விட்டு ஊண் உறக்கமின்றி நாற்பது நாட்கள் தவமியற்றினர். இவர்கள் தவத்திற்கிரங்கிய கருணையங்கடலாகிய அறுமுகவள்ளல் கடைசிநாளன்று அப்பிள்ளையைக் "குமரகுருபர" என்று அழைத்தார். அவ்வழைப்பைக் கேட்ட பிள்ளை உடனே "கந்தர் கலிவெண்பா" என்ற நூலைப் பாடித் தன்னை ஆட்கொண்டருளிய குமரவேள்மீது சாத்திற்று. அப்பெருமான் திருவருளால் குமரகுருபாருக்கு இலக்கண இலக்கிய அறிவெல்லாம் தாமே வந்து நன்கு பொருந்தின. இவர், மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழ், நீதிநெறிவிளக்கம், பண்டார மும்மணிக்கோவை, முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழ், சிதம்பரச் செய்யுட்கோவை, காசிக்கலம்பகம், சகலகலாவல்லி மாலை முதலிய நூல்களை அருளிச் செய்துள்ளார். தருமபுர ஆதினத்தைச் சேர்ந்த நான்காம் பட்டத்தி லெழுந்தருளியிருந்த மாசிலாமணி தேசிகரிடம் உபதேசம் பெற்ருர். அவரையே தமது ஞானசாரியராகக் கொண்டார். தமது குருநாதரின் ஆணைப்படி காசியாத்திரை செய்தார். காசியில் ஒருமடம் அமைக்க

விரும்பினர். அப்பொழுது அந்நகரை ஆட்சி செய்த டில்லி பாதுஷாவிடம் இந்தி மொழியில் பேசுவதற்குக் கலைமகளின் திருவருளைப் பெறுவதற்காக, "சகலகலாவல்லி மாலை" என்ற தோத்திர நூலைப் பாடினர். கலைமகளின் திருவருள் உடனே கிடைத்தது. டில்லி பாதுஷாவிடம் தமக்கு மடம் கட்டுவதற்கு வேண்டிய நிலத்தையும் பெற்றார். "குமாரசாமி மடம்" என்னும் பெயரால் ஓர் மடத்தையும் ஸ்தாபித்தார். பின்பு தருமையாதீனத்திற்கு வந்து தமது குருமணியை வழிபட்டார். இந்தக்குமரகுருபரசுவாமிகளே, திருப்பனந்தாள் காசிமடத்தின் முதற் குரவராவர். இவர் அருளிச்செய்த கந்தர்கலிவெண்பா இலங்கையிலுள்ள பல சைவ அன்பர்களால் பாராயண நூலாக ஓதப்பட்டு வருகின்றது. இவரியற்றிய நீதிநெறி விளக்கம் என்ற நூலை எனது பத்தாவது ஆண்டிலேயே என் தந்தையார் எனக்குக் கற்பித்தார். அதுவே என்னைக் குமரகுருபரரின் வாக்கில் மிகவும் ஈடுபடச் செய்தது. "சகலகலாவல்லி மாலை" என்ற நூலை நவராத்திரி நாட்களில் பாடசாலை மாணவர்களும் ஏனையோரும் பாராயணஞ் செய்வது வழக்கம்.

திருப்பனந்தாள் ஆதீனத்தின் ஸ்ரீகாசிமடமானது சென்ற நான்கு நூற்றாண்டுகளாகச், சைவசமய விருத்தியின் பொருட்டும், தமிழ் வளர்ச்சியின் பொருட்டும் பலவிதமான ஆக்கவேலைகளைச் செய்துவருகின்றது. சைவத்திருமுறைகளை வெளியிட்டும், நீதிநெறி விளக்கம், சிவஞான சித்தியார் போன்ற நூல்களை ஆங்கில, ஹிந்தி மொழி பெயர்ப்புடன் பிரசுரித்தும், பாடசாலைகள் நிறுவியும் வறிய மாணவர்களுக்கு நன்கொடை உதவியளித்தும், சிவாலயங்களைப் புதுக்குவித்தும், ஓதுவார் மூர்த்திகளைப் பல தலங்களில் நியமித்தும், இன்னும் பல வகையாலும் அறப்பணிகளைச் செய்து வருகின்றது.

இவ்வாதீனத்தின் பத்தொன்பதாம் பட்டத்திலெழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் சுவாமிகள், கல்வி கேள்விகளில் மிக்கவர். தமிழிடத்தில் பேரன்பு பூண்டவர். தமிழ்ப் புலவர்களையெல்லாம் நன்றாக ஆதரித்தவர். தமிழ்த் தாத்தாவாகிய டாக்டர். உ. வே. சாமிநாதையரின் நூற்பதிப்புகளுக்கெல்லாம் உதவியளித்த

வர். சென்னைப் பல்கலைக் கழகத்தின் வித்துவான் பரீட்சையில் முதல் மாணவராகத் திறமையுடன் சித்தியடைபவருக்கு ஆயிரம் ரூபாய் பரிசு வழங்க ஓர் திட்டத்தை அமைத்துள்ளார். இதனால் தமிழில் வித்வான் பரீட்சைக்குத் தோற்றுவோரின் தொகை பெருகியது.

இப்பொழுது இக்காசி மடத்தின் தலைவராக விளங்கும், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் தமிழ் நாடு செய்த தவத்தின் பயனாய் உதித்தவர். வேதம், ஆகமம், உபநிடதம் முதலிய வடமொழி நூல்களை நன்றாகக் கற்றவர். தொல்காப்பியம் முதலிய பேரிலக்கணங்களிலும், பத்துப்பாட்டு, புறநானூறு முதலிய சங்க இலக்கியங்களிலும் நல்ல புலமை வாய்ந்தவர். தமிழிசையிலும் மிக்க பிரியமுடையவர். தேவார திருவாசகங்களை இன்னிசையுடன் பாடும் வன்மை மிக்கவர். வடமொழி, தென்றமிழ், ஆங்கிலம், ஹிந்தி முதலிய மொழிகளில் நல்ல பயிற்சியுடையவர். சைவ சித்தாந்த சாத்திரங்களிலும், திருமுறைகளிலும், மற்றும் பல சமய நூல்களிலும் நல்ல ஆய்வும் தோய்வும் உடையவர். கன்னியாகுமரி முதல் திருக்கேதாரம் வரையிலுள்ள தலங்களையெல்லாம் சென்று தரிசிக்கும் பெருந்தவமுடையவர். சிவ பூசையில் பெரிதும் ஈடுபாடுடையவர்.

இவர் செய்துவரும் அறப்பணிகள் அளவிடற்கரியன. இவர் ஆற்றிவரும் நல்லறங்களைப் பார்க்கும்போது குமரகுருபர சுவாமிகள்தான் அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகளாக மீண்டும் அவதரித்தனரோ என்ற எண்ணம் யாவர் மனத்திலும் எழும். தவப்பெருந்திரு அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் 1944-ம் ஆண்டு மார்ச் மாதம் 26-ந் தேதி திருப்பனந்தாள் காசி மடத்தின் அதிபரானார். குமரகுருபரர் அருளிச் செய்த,

> " அறம்பொரு ளின்பம் வீடும் பயக்கும்
> புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவலொன்
> றுற்றுழியும் கைகொடுக்கும் கல்வியி னூங்கில்லைச்
> சிற்றுயிர்க் குற்ற துணை "

என்ற நீதிநெறிச் செய்யுளானது இவரது உள்ளத்தைப் பெரிதும் ஈர்த்தது. அதனாற்றான், இவர் கல்வித் துறையில் பெரிய நிலை பெற்ற அறங்களைச் செய்துள்ளார். தேசிய

கவி சுப்பிரமணிய பாரதியார் கூறியதுபோல், தமிழின் சுவையையும், சைவசித்தாந்தத்தின் பெருமையையும், தமிழ் வழங்கும் நாட்டுக்கப்பாலுள்ளவர்களெல்லாம் அறிய வேண்டுமென்ற பேரெண்ணமனது இவரது உள்ளத்தில் ஊற்றெடுத்துப் பொங்கி வழிந்தது.

காசியிலுள்ள இந்துப் பல்கலைக் கழகத்தில் சைவசித்தாந்தத்திற்கு ஓர் போதனை பீடம் அமைப்பதற்கு நிதி வைத்தார். அதனால் சைவ சித்தாந்தமானது அப் பல்கலைக் கழகத்தில் இன்றும் போதிக்கப்பட்டு வருகின்றது. அருள்நந்தி முனிவர் காலத்தோடொட்ட வொழுகும் பண்பு படைத்தவர். டெல்லி, கல்கத்தா, லக்னோ முதலிய பல்கலைக் கழகங்களில் சைவ சித்தாந்த விரிவுரைகள் நடப்பதற்கு ஏற்ற ஒழுங்குகளைச் செய்து அதற்குவேண்டிய நிதியையும் உதவியுள்ளார். ஏனைய திருமுறைகள், பெரியபுராணம், திருவிளையாடற் புராணம் பற்றிய தமிழ் விரிவுரைகள் மேற் கூறிய பல்கலைக் கழகங்களில் நடத்துவதற்கும், அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் நிதி வைத்துள்ளார். இதனை வடநாட்டவரும் வியந்து பாராட்டுகின்றனர். டாக்டர் உ. வே. சாமிநாதையரின் 'என் சரித்திரத்'தைப் பலர் வாசித்திருத்தல் கூடும். அந்நூலின் முன்னுரையில் பின் வருமாறு எஸ். கல்யாணசுந்தர ஐயரவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

"இப்பொழுது ஸ்ரீகாசி மடத்து அதிபர்களாக விளங்கும் அருங்கலை விநோதர்களும், பேறரச் செயல்கள் புரிந்து வருபவர்களுமாகிய ஸ்ரீலஸ்ரீ காசி வாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள், ஐயரவர்கள் சரித்திரம் வெளிவர வேண்டுமென்று அடிக்கடி என்னை நினைவுபடுத்தி வந்ததோடு நன்கொடையும் அளித்து உதவினார்கள்."

இது ஸ்ரீ அருள்நந்தித் தம்பிரான் அவர்கள் நூல்வெளியீடுகளுக்கு எவ்வாறு ஊக்கி உதவிசெய்து வருகிறாரென்பதற்கு ஓர் சான்றாகும். ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள், திருச்சிராப்பள்ளியிலுள்ள தாயுமானவர் சுவாமி திருமுன்னர் நாடோறும் காலையிலும் மாலையிலும் திருமுறைப் பாராயணஞ் செய்வதற்காக நிலையான ஒரு மூலநிதி வைத்துச் சிவ சிவ ஒலி மண்டபம் ஒன்றும் கட்டுவித்துள்ளார். அம்மண்டபத்தினைச் சென்னை அறநிலையப் பாதுகாப்பு மன்ற ஆணை

யாளர் உயர்திரு. எ. உத்தண்டராம பிள்ளை, பி.ஏ., பி.எல்., அவர்கள் ஆவணிமூல நன்னாளாகிய 11-9-59-ல் திறந்து வைத்துத் திருமுறைப் பாராயணத்தைத் தொடங்கி வைத்தார்கள். மேலும் தம்பிரான் சுவாமிகள் காசி முதல் கன்னியா குமரிவரை பன்னிரண்டு தலங்களில் ஓதுவார்களை நியமித்து நாளும் இன்னிசையாற்றமிழ் பரப்பி வருகின்றார்கள்.

ஸ்ரீ அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் தேவார திருவாசகங்களை, அவைகள் பாடப்பெற்ற அந்த அந்த ஸ்தலங்களில் உள்ள கற்சுவர்களில் செதுக்குவித்தார்கள். சில சிவஸ்தலங்களில் இவைகளைக் கண்ணாரக் கண்டு இன்புறும் பேறு எனக்கும் கிடைத்தது.

சங்கத் தமிழின் தலைமைப் புலவர் வீற்றிருந்த மதுரையில், திருக்குறளை அரங்கேற்றிய மதுரையில், மீனாட்சியம்மன் திருமுன்பு இருக்கும் பொற்றாமரைக் குளத்திற்கு அருகிலுள்ள கற்சுவர்களில் ஆயிரத்து முந்நூற்று முப்பதருங் குறளும் செதுக்கப்பட்டிருகின்றன. ஸ்ரீ அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களே சென்ற ஆண்டில் இதனைச் செய்வித்து முடித்தார்கள் என்ற செய்தி மகிழ்ச்சிக்குரியது.

"கல்லூரிகள், உயர்நிலைப் பள்ளிகள், தொடக்கப் பள்ளிகள் முதலிய கல்வி நிலையங்களுக்குப் பெரிய அளவில் நன்கொடை யளித்துள்ளார். செந்தமிழ்க் கல்லூரி, உயர்நிலைப் பள்ளிகள் முதலியவற்றைத் தாமே நடத்தி வருகிறார்கள். ஏழை மாணவர்களுக்கு உண்டியும் உறையுளும் இலவசமாக அளித்து வருகிறார்கள்.

" மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே !"

என்ற முதுமொழிக்கிணங்கப் பல இடங்களில் அற்றார்க்கும், அலந்தார்க்கும், யாத்திரிகர்களுக்கும், அந்தணர்களுக்கும், அன்னதானம் வழங்க ஏற்பாடு செய்து, அதற்கு வேண்டிய மூலதனமும் வைத்திருக்கிறார்கள். ஏழை மக்கள் பலர் மருத்துவ உதவியும் பெறுகிறார்கள்.

தரும உருவாய், அறிஞர் தமக்கெல்லாம் நாயகமாய் விளங்கும் ஸ்ரீலஸ்ரீ அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகளின்

அறுபதாம் ஆண்டு நிறைவு விழா காசியிலும், திருப்பனந் தாளிலும், தருமபுர ஆதீனத்திலும் ஆவணிமூல நாளாகிய 11-5-59-லும் அதற்குப் பின்னும் தொடர்ந்து நடைபெற் றது. வாழ்த்துப் பாக்களும், பாராட்டுரைகளும் ஆசியுரை களும் அவர்களுக்குப் பலரால் வழங்கப்பட்டன.

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் இதுகாறும் ஐம்பத்திரண்டு இலட் சம் ரூபாவிற்கு மேற்பட்ட தொகையினைப் பலப்பல அறக் கட்டளைகளுக்காக வாரி வழங்கியுள்ளார். இதில் இருபத் தைந்து இலட்சம் ரூபாயை அன்னதானத்திற்காக மாத் திரம் ஒதுக்கி வைத்துள்ளார்.

"சிவசிவ" என்ற திருநாமத்தை வாயாரப்பாடி மன மாரச் சிந்திக்கும் இயல்புடைய சுவாமிகள் பரத கண்டத்தி லுள்ள சிவஸ்தலங்களை யெல்லாம் தரிசித்துள்ளார்கள். இந்நாட்டில் பாடல் பெற்ற சிவஸ்தலங்களாகிய திருக் கேதீச்சுரமும் திருக்கோணமலையும் இருக்கின்றன. சுப்பிர மணிய ஸ்தலமாகிய கதிர்காமமும் இங்குதான் உள்ளது. ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் இவற்றையும் தரிசித்தல் வேண்டுமென இங்குள்ள பல சைவ அன்பர்கள் விரும்புகின்றனர். காந்தி யடிகளும், ஆறுமுக நாவலர் பெருமானும் தமது ஒழுக் கத்தை உயிர் போலப் பேணிக் காத்து வாழ்ந்தார்கள். இத ஞல் இவ்விருவரையும் அவரது பகைவர்களும் நன்கு மதித் தார்கள். இவ்விருவரின் புகழ் இன்றும் நின்று நன்கு நிலவு கின்றது. எல்லாவற்றிலும் பார்க்க ஸ்ரீலஸ்ரீ அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகளின் தூய ஒழுக்கமே அவருக்கு விழுப் பத்தையும், ஆக்கத்தையும், கீர்த்தியையும் அளித்திருக் கின்றது. திருப்பனந்தாள் காசி மடத்திற்கும் இது பெரும் சிறப்பையும் உயர்வையும் கொடுத்திருக்கின்றது.

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள், செந்திலாண்டவன் திருவருளால் திருச்செந்தூர் கடற்கரையிலுள்ள மணலைப்போல, இன்னும் பல்லாண்டு வாழ்ந்து, சைவ சமயத்தையும் தமிழையும் இந்தியாவிலும், இலங்கையிலும் மேலும் பரப்புவதற்குத் தம்மால் ஆவன செய்வாரென்று நம்பு கின்றோம்.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் தருமங்கள் மேன் மேலும் ஓங்கி வளர்க!

# படைப்பின் தொடக்கம்

(கோவை கிழார்)

நாம் வாழும் நில உலகம் ஏதோ ஒரு காலத்தில் தோன்றி இருக்கவேண்டும் என்று மக்கள் நம்புகிறார்கள். அந்தக் காலத்தைப் படைப்புக் காலம் என்று கூறுகிறார்கள். படைப்புக்காலம் எப்பொழுது பிறந்தது என்பதைப் பற்றிப் பலவேறு சமயத்தார்கள் பலவேறு வகைகளாகக் கூறுகின்றார்கள். இந்தக் கூற்றுக்கள் அவரவர்களுடைய நம்பிக்கைகளைப் பொறுத்தும், புனிதமாக எண்ணப்படும் நூல்களில் கண்ட கருத்துக்களைப் பொறுத்தும் வேறுபடுகின்றன. மிகவும் அண்மையிலே தோன்றியதாகக் கருதும் யூதர் சமயம் கொண்டிருக்கும் கொள்கை மற்றவர்களுக்கு வியப்பாகத் தோன்றும். அவர்கள் கொள்கை யாதெனில் உலகம் தோன்றியது கிறித்து சகாப்தத்திற்கு முந்தி 3760 ஆண்டுகளும் மூன்று மாதங்களுமாம். அஃதாவது இன்றைக்கு 5720 ஆண்டுகளுக்கு முன் என்பர். இது விவிலிய நூலில் பழைய ஏற்பாட்டின்படி கணக்கிட்டதாகும். யூதர் கொள்கையைக் கிறித்துவர்களும், முகமதியர்களும் ஏற்றுக் கொள்கிறார்கள். இக்கொள்கையை விஞ்ஞானம் அறவே மறுக்கின்றது.

இனி பாரத நாட்டுச் சமயங்கள் வேறாக இக்காலத்தைக் குறிக்கின்றது. வடமொழியில் உள்ள ஆயுர்வேதத்திலும் அதனை யொட்டி இருக்கும் சோதிட நூல்களிலும் படைப்புக் காலத்தைப் பல எண்களைக் கொண்டு கணித்திருக்கின்றது. பண்டைய வான நூல் ஆசிரியர்கள் பிரகத் சாதகம் முதலிய அரிய நூல்களை எழுதி இருக்கின்றார்கள். பாஸ்கராச்சாரியார் முதலிய கணிதநூல் ஆசிரியர்கள் வானத்தில் காண்கின்ற தாரகைகளை எண்ணிக் கணக்கிட்டுக் காலத்தைக் கணித்து இருக்கிறார்கள். காலத்தின் அளவைகளைக் குறிக்கும்போது நான்கு யுகங்களாகப் பிரித்து அந்த யுகங்களை ஆண்டுகளாக வகுத்து இருக்கின்றார்கள். கிருதயுகம் 16 இலட்சம், திரேதயுகம் 12 இலட்சம், துவாபரயுகம் 8 இலட்சம், கலியுகம் 4 இலட்சம் ஆக நான்கு யுகங்களுக்கு நாற்பது இலட்சம் ஆண்டுகள் என்று கணக்

கிட்டு இருக்கின்றார்கள். இனி உலகம் தோன்றியதை 195 கோடியே 58 இலட்சத்து 85 ஆயிரத்து 62 ஆண்டுகள் என்று கணித்து இருக்கின்றார்கள். இதனைக் கணக்கிட்டால் 490 சதுர் யுகங்கள் ஆகின்றன. இதுதான் வடநாட்டுக் கொள்கை.

இனி தென்னாட்டுக் கொள்கை சிறப்பாகச் சைவ சித்தாந்தம் வேறு வகையாக வெளியிடுகின்றது. உலகப் பொருள்கள் மூன்று. இம்மூன்றும் மெய்ப் பொருள்கள் அல்லது உள்ள பொருள்கள். இறைவன், உயிர்கள், உலகம் இம்மூன்றும் அந்தப் பொருள்களாகும். இந்த மூன்றும் தோன்றாது - அழியாது. உலகம் மட்டும் மாறி வரும். அந்த மாறுதலைத்தான் படைப்பு என்கிறார்கள். அது எக்காலத்திலும் நடந்துகொண்டே இருக்கும். ஆகவே படைப்புக்குக் காலம் என்பது இல்லை. எந்தக் காலத்திலும் புதிது புதியதாக உயிர்கள் பிறந்துகொண்டே வருவதினால் பிறப்புக்களுக்குக் காலம் இல்லை. உயிர்கள் உடலையெடுப்பதுதான் பிறப்பாகும். அப்பிறப்பு எப்போதும் தோன்றிக் கொண்டே இருப்பதினால் காலச்சுட்டு என்பது கிடையாது. ஒரு தனி ஆளுக்குப் பிறப்பு கூறலாமே தவிர உலக ஆட்களுக்குக் கூறமுடியாது. உயிரற்ற அஃறிணைப் பொருளாகிய இந்த உலகத்திற்கும் அப்படியே. பெருமானுடைய திருவிளையாடலினால் தோற்றமும், அழிவும் ஏற்படுகின்றன. 'தோன்றியது அழியும்' என்பது ஒரு பழமொழி. இந்தத் தோற்றம் இறைவனால் ஆற்றப்படும் செயலே அன்றி வேறல்ல. குறித்த காலத்திற் கொருமுறை கண்ணுக்குத் தோன்றும் உலகம் அழியும். அதனைப் பிரளயம் என்பார்கள். அழிந்தபிறகு மீண்டும் தோன்றும், அதனையும் படைப்பு எனலாம். ஆகவே அந்த அழிவும் தோற்றமும் மாறிமாறி வருவதனால் அதற்கும் ஒரு தொடக்கக் காலம் என்பது இல்லை. ஆகவே இந்தச் சித்தாந்தத்திற்குப் படைப்புக் காலம் என்பது தேவையே இல்லை.

இனி யூதர்களுடைய கூற்றை ஒரு சிறிது ஆராய்வோம். அவர்களுடைய நூலின்படி உலகம் தோன்றி 5720 ஆண்டுகள்தான் ஆயிற்று. இந்தக் குறுகிய காலத்தில் உலகத்தில் இருக்கும் உயிர்கள் யாவும் தற்போது

இருக்கும் பெருகிய நிலை அடைந்து இருக்கின்றன. அது கூடுமா என்று ஆராய்வோம்.

விவிலிய நூலின்படி இறைவன் பிரபஞ்சம் முழுவதை யும் ஆறு நாட்களில் இயற்றி ஏழாவது நாளில் ஓய்வெடுத் துக் கொண்டார், இதுதான் படைப்பு என்பது. ஒன்றும் அற்றநிலை அதாவது சூனியத்தில் இருந்து இந்தப் பிரபஞ் சத்தைப் படைத்தார். முதலில் மண்ணையும், விண்ணையும் படைத்துப் பிறகு வெவ்வேறு உயிர்களையும் படைத்து இறுதியில் ஒரு ஆணையும், பெண்ணையும் தமது உருவத்தைப் போல் படைத்தாராம். இவ்விருவருக்கும் பிறந்தவர்கள் நாளுக்குநாள் பெருகித் தற்போதுள்ள மக்கள் தொகை யாக வளர்ந்து இருக்கின்றார்கள். இதன் மத்தியில் நோவா என்பவன் காலத்தில் மக்கள் கெட்டுப் போயினமையால் அவர்களைத் தண்டிப்பதற்காக ஒரு பிரளயம் அல்லது பெரு வெள்ளம் தோன்றியது. அப்போது தெரிந்தெடுக்கப்பட்ட சில உயிர்கள் ஒரு பெட்டியில் அமர்ந்து இருந்த வகையில் அப்பெட்டி வெள்ளத்தில் மிதந்து, பிறகு வெள்ளம் ஓய்ந்து மக்கள் எல்லாம் மடிந்து போக மீதியாய் நின்றவர்கள் வெகுசிலரே. அவர்கள் மீண்டும் பெருக்கமடைந்து தற் போதுள்ள மக்கள் தொகையாகி இருக்கின்றார்கள். இதற் கிடையில் கணக்கற்ற போர்கள், கணக்கற்ற தொத்து நோய்கள் இவைகளுக்கெல்லாம் தப்பித்துத் தற்போ துள்ள கோடி மக்களாய் இருக்கிறார்கள். ஒரு ஆணும், பெண்ணும் 5720 ஆண்டுகளுக்குள் கோடி மக்கள் ஆவது எப்படி? பகுத்தறிவுள்ள மனிதன் இந்தக் கதையை நம்புவானா? விஞ்ஞானம் அதனை மறுக்கின்றது.

விஞ்ஞானத்தின் முடிவுகளின்படி உலகம் கூர்தல் முறை அல்லது வளர்ச்சி முறையைத் (Evolution) தழுவி வருகின்றது. ஒவ்வொரு உயிரும் மணிவாசகப் பெருமான் கருத்தைப்போலக் கல்லாகி, புல்லாகி, மரமாகி, பறவையாகி, விலங்காகி, மனிதன் ஆவான் என்ற குறிப்பே சரியானது என்று நாம் அறியலாம். இவ்வாறு வளர்ச்சி முறையில் உயிர்ப் பெருக்கம் இருக்க ஆறு நாட்களில் எல்லா உயிர் களும் தோன்றிற்று என்றால், அதை எப்படி நம்பமுடியும்.

மேலும் உயிர்களிலோ சிறப்பாக மனிதர்களிலோ உடலின் நிலைமை சிறிது வேறுபடவேண்டு மென்றால்

ஆயிரக்கணக்கான ஆண்டுகள் பிடிக்கும். அதனை விஞ்ஞான ஆராய்ச்சி நன்கு விளக்குகின்றது. ஆதாம், ஏவாள் என்ற இரண்டு முதல் மக்கள் தோன்றின பிறகு அவர்கள் சந்திப்பில் நீக்கிரோக்கள், சிகப்பிந்தியர்கள், மங்கோலியர்கள், சித்தியர்கள், ஆரியர்கள், திராவிடர்கள், வெள்ளையர்கள் ஆகிய கணக்கற்ற நிற பேதங்களால் பீடிக்கப்பெற்றவர்கள் எவ்வாறு 5720 ஆண்டுகளுக்குள் தோன்றி இருக்கக்கூடும். இதையெல்லாம் ஆராய்ந்தால் விவிலிய நூலில் கண்டிருக்கும் கொள்கை நம்பத் தகுமா?

ஆகவே படைப்புக் காலத்தைப் பற்றி ஆராயப் புகும் போது அது ஒரு நாளில் தோன்றியதென்று கூறவே முடியாது. பலவேறு சமயங்கள் வெவ்வேருகக்கூறி இருந்த போதிலும் சித்தாந்தச் சமயத்தின் கருத்தே சால்புடைத்தாகத் தோன்றும். ஒரு குறித்த தொகையைக் கூறி அந்த நாளில் உலகம் தோன்றிற்று என்று சொன்னல் அது மெய்யான செய்தியாய் இருக்க முடியாது. புராணக் கதைகளையும் சமயக் கூற்றுகளையும் வைத்துக்கொண்டு இதனை நிச்சயிக்க முடியாது. உலகப் பெருக்கத்தையும் அறிஞர்களுடைய ஆராய்ச்சிகளையும், பண்டைத் தமிழ் முன்னேர்களின் ஆய்வு மொழிகளையும் வைத்துக்கொண்டே இதற்கு ஒரு முடிவுகட்ட வேண்டும். அப்படிப்பட்ட முடிவைத்தான் சைவ சித்தாந்தம் தெளிவாகக் கூறுகின்றது.

———

### திரு. மு. சின்னசாமி ரெட்டியார் அவர்கள்

# வாழ்க்கைக் குறிப்புக்கள்

(தி. கி. நா.)

திரு. மு. சின்னசாமி ரெட்டியார் அவர்கள், கர, ஆடி 2, வியாழக்கிழமை மயிலத்தை அடுத்த இரட்டணையில் தோன்றினர்கள்; தந்தையார் - வெங்கிடசுப்பா ரெட்டியார்; தாயார் - அரங்க நாயகியார். இவர், மங்கை நாயகியாரை மணந்து திருவெண்ணெய் நல்லூரைத் தாயகமாக்கி இல்லறத்தை நடத்தினர். சுந்தர ரெட்டியார், பாலசுப்பிரமணிய ரெட்டியார், இலட்சுமிகாந்தம், சரஸ்வதி, புஷ்ப

வேணி ஆகியோர் இவரது கால்வழிகள். இவர்களில் சுந்தர ரெட்டியாரும் சரஸ்வதியும் காலமாயினர்.

திரு. ரெட்டியார் அவர்கள், திருக்கோவலூர் தாலுக்கா போர்டு, தென்னார்க்காடு ஜில்லா போர்டு, அங்கத்தின ராகச் சேவை செய்தார்கள்; தம் ஊர் தடுத்தாட் கொண்ட நாதர் ஆலய இறைபணியாளராகப் பல ஆண்டுகள் பணி புரிந்தார்கள்; கிராமக் கூட்டுறவு நாணயச் சங்கம், தான்ய ஈட்டுக் கூட்டுறவு விற்பனைச் சங்கம், நில அடமான பாங்க், கூட்டுறவுக் கட்டடச் சங்கம் ஆகியவற்றின் தலைவராகப் பல்லாண்டுகள் நேர்மை, திறமையுடன் சேவை செய் தார்கள். தடுத்தாட்கொண்ட நாதனைக் காண வரும் அடி யார்களை இவர்கள் தம் மனைக்குக் கொண்டுவந்து உண்டி நாலுவிதத்தி லாறுசுவைத் திறத்தினில் ஒப்பிலாது உதவி வந்தார்கள்.

திரு. ரெட்டியார் அவர்கள், அண்ணாமலையில் கோபு ரத்து இளையனார் திருமுன், அருணகிரி அடிகளை முதன் முதலில் அமைத்து, ஆனிப் பௌர்ணமிதொறும் அபிஷேக ஆராதனையை இடைவிடாது செய்து அருணகிரியார் குரு பூசையைச் சிறப்பித்து வந்தார்கள். இவர், திருமுருகாற் றுப்படை, கந்தர் அநுபூதி, கந்தர் கலிவெண்பா, பாரா யணர்; திங்கள்தொறும் சஷ்டி விரதம் மேற்கொண்டவர். 30-4-48ல் கம்பர் கல்விக் கழகம் அமைத்து, பதிவுசெய்து அதன் ஆட்சியில் காந்தி நினைவு உயர்நிலைப் பள்ளியைப் பல அல்லல்கள் விளைந்த போதும் தம் உயிர் நாடியாகக் கருதி அதன் செயலாளராகவும் எழுத்தராகவும் மிகக் கடுமையாக உழைத்துத் தன் உடல் உயிர் உடைமைகளைத் தந்து சிறப்பித்தமை, இவரது வாழ்நாளில் போற்றற்குரிய செயல்கள். இவர், வடலூரில் இயங்கும் சுத்த சன்மார்க்க சங்கத்திற்கு உற்றதுணைவராக இருந்து உதவி செய்தார்.

திரு. ரெட்டியார் அவர்கள், 1924-ல் சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 24-ஆம் ஆண்டு விழாவைத் தமது ஊரில் தம் சொந்தச் செலவில் ஞானியார் அடிகள் தலைமையில் நடத்திப் பேரும்புகழும் கொண்டதோடு, பல ஆண்டுகள் பல சமாஜ மாதக் கூட்டங்களையும் நடத்தியுள் ளார். "மெய்கண்டாரும் சிவஞான போதமும்" (கா. சுப்பிரமணியப் பிள்ளை, எம்.ஏ., எம்.எல். எழுதியது),

"திருவெண்ணெய் நல்லூர்ப் பெருமை", "முருகன் மூன் நூல்" முதலிய நூல்களை இவர் தம் செலவில் சமாஜப் பதிப்புகளாக வெளியிட்டார். சமாஜ ஆண்டு விழாவிற்குத் தவறாது வருவார். இவரது தொண்டினைப் பாராட்டி, திரு. வி. க. தம் வாழ்க்கைக் குறிப்பில் அவரது "அன்புத் தொண்டுகள் என்றும் மறக்கற்பாலனவல்ல" என்று எழுதிச் சிறப்பித்திருக்கிறார்கள். வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்த இவர், அவரது அன்பர் குழாத்தினர் இரங்க, சார்வரி ஆடி 22 சனிக்கிழமை பௌர்ணமி நாளில் வானுறையும் தெய்வமானார்.

---

சைவ சித்தாந்த மகா சமாஜ அன்பர்

உயர்திரு. சின்னசுவாமி ரெட்டியார் அவர்கள்,

இறைவன் திருவடி அடைந்தபோது எழுதிய

# இரங்கற் பாக்கள்

(கோவை கிழார்)

சின்ன சுவாமிச் சீமான், அந்தோ,
உன்னற் கெட்டா வூர்சென் றாரோ?
பொன்னர் நாட்டின் பொலிவோ, அவரை
என்ன முறையில் இழுத்த தென்கோ!

வெண்ணெய் நல்லூர் விரும்பிச் சென்றேன்,
திண்ணை மீதே திகழ்ந்து நின்றார்;
கண்ணை அசைத்துக் கனிவில் இழுத்தார்,
விண்ணும் நாண விடுத்தார் நட்பை!

அதிகைத் தலத்தில் அதன்பின் கண்டேன்,
பொதிகைத் தமிழில் பொழியும் சமாசம்
விதிகைக் கொண்டு விழாவை நடத்த
துதிகைப் பற்றித் தொடர்ந்தார் உதவி!

ஆண்டு தோறும் அமையும் விழாவில்
வேண்டும் ஆக்கம் விளைத்துச் செல்வார்;
தூண்டும் மகிழ்வில் தொடர்ந்து சைவம்
நீண்டு படர நிகழ்ந்து காப்பார்.

இலங்கைக் கொருகால் இனிது விரும்பி
அலங்கல் சிறப்பை அடையச், சமாசம்
துலங்க, அவ்வணும் தொடர்ந்து, நண்பர்
குலங்கள் விளங்கக் கூடி வந்தார்.

இந்த முறையில் எங்குச் சமாசம்
சிந்தை மகிழச் சென்று வருமோ,
அந்த இடத்தில் அரிய நோக்கில்
முந்தி நிற்பார் முதல்வன் பணியில்.

மணிப்பேர் விழாவோ மகிழ்வில் வரவே,
அணிப்பேர் அறிஞர் அழைப்பில் வந்தார்;
பணிப்பே நாடியும் பலரும் போற்றித்
(தணிப்பே இன்றித் தழைத்தார் புகழ்ந்தே)
திணிப்பே நின்றித் தேர்ந்தார் புகழே.

கல்விப் பயனின் கரைகண் டறிந்து
நல்வித் தகத்தில் நாட்டம் தரவே,
பல்வித் தகரும் பாரா முறையில்
சொல்வித் தகத்தைச் சூட்டித் தந்தார்.

உயர்ந்த நிலையில் ஓங்கும் பள்ளி
செயந்தந் திலங்கச் செயலா ளாக
வியந்து போற்றி விழையும் இளைஞர்
நயந்து படிக்க நாட்டி நின்றார்.

வாணாள் முழுதும் வளமே காணத்
தூணைத் தாங்கித் தொடர்ந்தார் வாழ்க்கை;

பேணா நின்ற பெரும்வாழ்க் கையினை
மாணார் விண்ணேன் மறைத்தேத் திற்றோ?

ஆகா, இதுவும் அரனார் செயலோ!
காகா என்றே கதறக் குடும்பம்,
ஏகா நிற்க இயற்றல் அறமோ?
நீகாண் எனவே நினைவும் வருத்தும்.

அந்தோ, துயரம் ஆட்டி வைக்கும்,
உந்தோட் டிடுமோர் உணர்வைக் கெடுக்கும்;
சந்தோ டத்தில் களிக்கும் எதையும்
முந்தோட் டிடுமே, முன்செய், வினையே!

---

## இரங்கற்பா*

ஆசிரியப்பா

திருவெண்ணெய் நல்லூர் என்னும் சிறந்த
சிவத்தலப் பெயரைச் செவியிற் கேட்டதும்,
சுந்தரர் தம்மை நந்தம் சிவபிரான்
தடுத்தாட் கொண்ட தண்ணருள் அதனையும்,
சைவசித் தாந்தச் சான்றோர் ஆகிய
மெய்கண்ட தேவர் விளங்கிய சிறப்பையும்,
அம்புவி யதனிற் கம்பர் பெருமான்
இராம காதையை எழிலுற இயற்றிடக்
காரண ராகக் கருதும் வகையில்
கொடையினிற் சிறந்த சடையப்ப வள்ளல்
வாழ்வாங்கு வாழ்ந்த மாட்சிமை தனையும்,
யாவரே ஆயினும் இனிது நினைப்பர் !
அவ்வகை நினைவொடு சைவசித் தாந்த
சமாஜ அன்பர்கள், தன்னையும் தகவுற

---

* திருவெண்ணெய்நல்லூர் உயர்திரு. மு. சின்னசாமி ரெட்டியார் அவர்கள் மறைவு குறித்து வருந்தி, அவர்க்கு 'நீத்தார் வழிபாடு' நிகழ்ந்த பொழுது 17–8–60 சைவ சித்தாந்த மகா சமாஜத்தினால் வழங்கப்பட்டது. இயற்றி உதவியவர் : முருகவேள்.

எண்ணிப் பெரிதும் இன்புறும் வகையில்
வெண்ணெய்நல் லூரில் மிகப்பெருஞ் சிறப்புடன்
**சின்னசாமி ரெட்டியார்** திகழ்ந்து வந்தனர்!
சைவ நலம்மிகு சான்றோர் அவர்க்கும்
சமாஜம் தனக்கும் சாற்றரும் தொடர்புகள்
மிகப்பல உண்டு. விரித்திவண் உரைப்பதென்?
சமாஜ வளர்ச்சியில் தனிப்பெருங் கருத்தினர்!
மற்றதன் வாழ்நாள் உறுப்பினர்! பொற்புற
ஆண்டுகள் தோறும் மாண்புயர் சமாஜ
விழாக்களுக் கெல்லாம் விருப்பொடு வருபவர்!
அருட்டிரு ஞானியார் அடிகளார் தலைமையில்
சைவசித் தாந்தமா சமாஜம் அதனின்
இருபத்து நான்காம் யாண்டு விழாவை
தாமேமுன் நின்று தனிப்பெருஞ் சிறப்புடன்
நடாத்திக் கொடுத்த நற்பெருஞ் செல்வர்!
பெருகிய சுவையின் 'முருகன் முந்நூல்'
'மெய்கண்ட தேவரும் சிவஞான போதமும்'
'திருவெண்ணெய் நல்லூர்ப் பெருமை' முதலிய
அரும்பெறல் நூல்கள் திருந்திய முறையில்
சமாஜச் சார்பினில் தக்காங்கு வெளிவர
நன்கொடை பெரிதும் அன்புடன் வழங்கினோர்!
தென்னாற் காடு திகழ்மாவட் டத்தில்
கூட்டுறவு அமைப்புகள் நாட்டி வளர்த்த
அரும்பெருஞ் சிறப்புடைப் பெரும்பெயர்க் குரிசில்!
அண்ணா மலையினில் அருண கிரியார்
படிமம் அமைத்துப் பாங்குற விழாவும்
மிகப்பல ஆண்டா விரும்பிச் செய்தவர்!
செந்திற் பெருமான் திருவடி மறவாது
கந்தர் சட்டி விரதம் கடைப்பிடித்து
அறம்பல புரிந்த அருந்தமிழ்ச் சைவர்!
காந்தி அடிகளார் நினைவியற் பள்ளிக்குத்
தலைவரும் செயலரும் தாளா ளரும்எனப்
பற்பல வகையில் பொற்புறத் திகழ்ந்தவர்!
வடலூர் வள்ளலார் மாண்புற நிறுவிய
சமரச சன்மார்க்க சங்கம் தழைக்க
ஐயாயிரம் வெண்பொன் அளித்ததன் 'பேணுநர்'

என்னப் பிறங்கிய இயல்புடைச் செம்மல்!
அருட்டுறை நாதர் திருக்கோயில் அதனுக்கு
இருபத்தெட் டாண்டுகள் இனியஅறங் காவலர்
ஆக விளங்கிநின் றரும்பணி புரிந்தவர்!
இத்தகு பண்பொளிர் வித்தகத் தோன்றல்
**சின்ன சாமி ரெட்டியார்** என்னும்
அன்புரு வாகிய அண்ண லார்தாம்,
மறைந்தமை குறித்து நாமெலாம் பெரிதும்
வருந்துதும் ஆயினும், மற்றினி என்செய்வது?
விசாக நாளில் மேதகத் தோன்றித்
திருவோண நாளில் சிறப்பொடும் மறைந்த
அவர்தம் ஆருயிர் அம்பல வாணர்
திருவடி சேர்ந்து சிறந்தகல் இன்புறும்
சுத்தாத் துவைத சித்தாந்த முத்தியை
எய்துக! எனவும், மெய்திகழ் அவர்தம்
பண்புடைப் புதல்வர் பாலசுப்ர மணியம்
தம்முடை அருமைத் தந்தையார் போலவே
வையத்து வாழ்வாங்கு வாழ்ந்தொளிர்க! எனவும்,
எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சி
மனமொழி மெய்களின் வழுத்துதும் யாமே!

வேறு

செய்ய **திருவெண்ணெய் நல்லூர்**
எனலும்,நம் சிந்தையினில்
மெய்யே உயர்**சின்ன சாமிநல்**
**ரெட்டியார்** மேவுகிற்பார்!
ஐயோ! அனைய பெரும்புகழ்த்
தோன்றல் அவர்மறைந்தார்!
பொய்யோ '**நெருநல் உளன்இன்**
**றிலை**'எனும் பொன்மொழியே?

—

# Guru Narayana

In the "Siddhantam" of 1960 July a mention has been made of Narayana Guru. Of him a few lines from the "Values" of October–November 1959 are hereby extracted.

"The Guru was not the type of spiritual person, who weltered in tearful emotions. The Guru was critical of all vagueness in spirituality. He avoided devotional outpourings; although he might shed real tears of Sympathy with some poor forgotten man."

நாராயண குரு கண்ணீர் வடித்தார். அப்பர் சுவாமிகள் வணங்கினார்கள். "அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய் ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் கங்கைவார் சடைக்கரந்தார்க்கு (இமையத்தில் குளிர்ந்த உறை பனி நீரை கங்கையைச்) சடையில் தாங்கி அழுக்குடைய வெப்பநோயைப் போல் அநேகத்தை விலக்கி அருள்வார்க்கு; அதாவது தீயவைகளை விலக்கி அன்பும் அறிவும் கூடிய நன்னடத்தையைக் கொடுத்து அருள் புரியும் சிவனாருக்கு) அன்பராகில் அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே."

"Like Sankara the Guru was suspicious of devotional manifestations"

"Romain Roland, the celebrated French author, in a foot note in his life of Ramakrishna had the acumen to recognise this characteristic of Narayana Guru when he wrote that "Bhakthi effusions fill him with mistrust" (p. 160 Almora edition 1947)"

"Help yourself and God will help you"

"தானே தனக்குப் பகைவனும் நட்டானும்
தானே தனக்கு மறுமையும் இம்மையும்"—திருமந்திரம்.

"Real character is not only outward conduct but also quality of inward thinking; for, thoughts are heard in Heaven"—*Henry Wood.*

TAMIL BLIND BROOM

[Author of 'Saiva Mission' published in August issue]

திருமணம்: நமது சமாஜப் பேரன்பரும், சமாஜப் பொன்விழா மலர்க்குப் பொருள் வழங்கியவரும், சமய சபைகள் பலவற்ருேடு தொடர்புடையவரும், தெய்வ பக்தியிலும் பொதுநலப் பணிகளிலும் மிக்க ஈடுபாடுடையவரும், அன்னதானம் செய்தலிற் பேரார்வங் கொண்டவரும், கொடைத்திறன் மிக்க செல்வரும் ஆகிய மேயர் கம்பெனி திரு. ஆர். மாசிலாமணி முதலியார் அவர்களின் புதல்வர் திரு. மா. இராசபாதர் அவர்களுக்கும், திரு. ஜி. இராசகோபால் முதலியார் அவர்களின் புதல்வி, திரு. வசந்தலட்சுமி அம்மைக்கும் 9-9-60 வெள்ளிக்கிழமையன்று, சென்னை - தேனும்பேட்டையில் மிகவும் சிறப்புறத் திருமணம் நிகழ்ந்தது. அதுபோது சமாஜச் சார்பில் வாழ்த்திதழ் வழங்கப்பெற்றது. அம்மையப்பர் திருவருளால் மணமக்கள் நீடினிது நலமுற வையத்து வாழ்வாங்கு வாழ்க என வாழ்த்துகின்ருேம்.

திருமணம்: நமது சமாஜப் பேரன்பரும், 'திருக்கோயில்' ஆசிரியர் திரு. ஜி. கலியாணம் பிள்ளை எம்.ஏ. அவர்களின் உறவினரும், சைவத் தமிழ் நலங்கள் சான்ற பெருந்தகையாரும் ஆகிய திரு. கே. ராஜு முதலியார் அவர்களின் புதல்வர் திரு. ரா. கண்ணப்பன் அவர்களுக்கும், கந்தாடு திரு. அப்பாதுரை பிள்ளை அவர்களின் புதல்வி திரு. இராதாபாய்க்கும் திருப்பாசூர்க்கு அணித்துள்ள கைவண்டூரில் மிகவும் சிறப்புறத் திருமணம் நிகழ்ந்தது. திருவள்ளூர் வட்டத்தைச் சேர்ந்த உயர் அலுவலாளர்கள் பலரும் திருமணத்திற்கு வந்திருந்து சிறப்பித்தனர். மணமக்கள் நீடினிது வாழ்க என அம்மையப்பர் திருவருளை வழுத்துகின்ருேம்.

கூட்டுப் பிரார்த்தனை: கொழும்பு ஜிந்துப்பட்டி ஸ்ரீ சிவசுப்பிரமணிய சுவாமி கோயிலில் சென்ற ஆகஸ்டு மாதம் ஞாயிறுதோறும் வழக்கம்போற் சிறப்புற நிகழ்ந்தது. செல்வியர்கள் - எஸ். கோகிலவர்த்தனி - எஸ். சுபத்ரா, எஸ். காமாட்சி ஆகியவர்களும்; திருவாளர்கள் - ச. ஈஸ்வரசர்மா, எஸ். சரவணமுத்து, அண்ணமலை, டி. கே. குப்புசாமி, கே. வி. கணபதி, எஸ். நடராசா, கிருஷ்ண பாகவதர், வி. சிவஞானம், சி. தம்பையா முதலிய பெருமக்கள் பலரும் நிகழ்ச்சிகளிற் கலந்துகொண்டு சிறப்பித்தனர். தெட்சிணத்தார் வேளாளர் மகமைப் பரிபாலன சங்கத்தாரின் சமயத் தொண்டுகள் பெரிதும் பாராட்டற்பாலன.

சமாஜ ஆண்டுவிழா: திருக்கேதீச்சரத்தில் 30, 31-12-60, 1-1-61 நாட்களில் நடைபெற இருக்கின்றது. அது குறித்து 26-6-60-ல் நடைபெற்ற பொதுக்கூட்டம் ஒன்றில், வரவேற்புச் சபை ஒன்று அமைக்கப்பெற்றது. அவ்வரவேற்புச் சபைக்குத் திரு. சேர் கந்தையா வைத்தியநாதன் அவர்கள் தலைவராகவும், திரு. சி. நடேசன் எம்.பி.ஈ., திரு. த. சிவலிங்கம் என்னும் இருவரும் தனாதிகாரிகளாகவும், திரு. வி. அல்லிராசா, திரு. ச. அம்பிகை பாகன் என்னும் இருவரும் காரியதரிசிகளாகவும் தெரிந்தெடுக்கப் பட்டுள்ளனர். அவ்வரவேற்புச் சபையின் கூட்டம் ஒன்று, யாழ்ப் பாணம் வண்ணை வைத்தீஸ்வர வித்தியாலயத்தில், வரவேற்புச் சபைத் தலைவர் திரு. சேர் கந்தையா வைத்தியநாதன் அவர்கள் தலைமையில், 7-9-60 புதன்கிழமை பிற்பகல் 5 மணிக்குக் கூடியது. அதன்கண் சமாஜ மாநாட்டிற்காகச் செயற்குழு நியமித்தல், பணம் சேகரித்தல், பிரசாரம் செய்தல் முதலிய விஷயங்கள் ஆராயப் பட்டன என்னும் செய்தியினைச் சமாஜ அன்பர்களுக்கு மகிழ்ச்சி யுடன் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

---

பிரிவாற்றாமை: சமாஜத்தின் மிகப் பழைய உறுப் பினரும் பேரன்பரும், சமாஜச் செயற்குழுவில் பல ஆண்டு களாகத் தொடர்ந்திருந்து பணியாற்றி வருபவரும், செந் தமிழ்ச் சைவ நலங்களிற் சிறந்துயர்ந்த பெரியாரும் ஆகிய தாம்பரம் ச. நடேச முதலியார் அவர்களின் புதல்வர் திரு. ந. இரத்தினவேலு முதலியார் அவர்கள் 28-8-60 ஞாயிறன்று காலை இறைவன் திருவடி நீழல் எய்தினார்கள். நீண்ட கால மாக உடல் நலம் இன்றி யிருந்தபோதும், அவர்கள் செந் தமிழ் அறிவிலும் சிவநெறிப் பற்றிலும் நினைவாற்றலிலும் சிறந்து விளங்கினார்கள். திருமுறைப் பயிற்சியும், எவரிடமும் இனிமையாகப் பேசும் இயல்பும் அவர்களிடம் சிறந்திருந் தன. அவர்தம் மறைவு குறித்த இறுதிச் சடங்குகளிற் சமாஜ அன்பர்கள் பலரும் கலந்து கொண்டனர். திரு. இரத்தினவேலர் அவர்களின் ஆருயிர், அம்பலவாணர் திரு வடிக்கீழ் என்றும் வைகி இன்புறுவதாக!

---

Printed at the Sadhu Press, 15. Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14. Warren Road, Mylapore, Madras-4.